நகரத்தார் திருமணத்தில்
சமக்கிருதக் கூச்சல் ஏன்?



சா. கணேசனின்

# தமிழ்த் திருமணமுறை.

விலையில்லா வெளியீடு - 4.

காந்தியத் தொண்டர் மன்றம்,
காரைக்குடி.

பாசின் பழநியப்ப செட்டியாரின் பேத்தியும்
பழ. ஆறுமுகத்தின் மகளுமான
அல்லிக்கும்

உ. சிறுவயல்
மெ. பழநியப்பனுக்கும்

21—8—75ல் நடந்த தமிழ்த் திருமணத்தன்று
வெளியிடப்பட்டது.

## பதிப்புரை.

தமிழர்கள் தமிழில்தான் திருமணச் சடங்குகளைச் செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்த எழுந்ததே இச் சிறு வெளியீடு.

சோழர்கள் காலத்திற்குப் பின்னும் கோவில்களைக் கட்டிக் காத்தவர்கள் நகரத்தாரே. ஆனால் ஏனோ கோவிலுக்குள் தமிழைக் கட்டிக் காக்கத் தவறி விட்டார்கள்.




ஆத்தாளோடு பிறந்தவனை 'அம்மான்' என்றும், அவன் மனைவியை 'அம்மான் பெண்டு' என்றும் அழகு தமிழில் அழைக்கத் தெரிந்த இவர்கள், தனித் தமிழியக்கம் தோன்றுவதற்கு முன்பிருந்தே சாவியைப் பூட்டுக்குச்சி என்று இயல்பாகவே தனித் தமிழில் சொல்லிப் பழக்கப்பட்ட இவர்கள், இன்பத் தமிழில் 'இசை பிடிமானம்' எழுதும் வழக்கமுடைய இவர்கள், திருமணச் சடங்குகளில் தமிழுக்கு இடம் தர ஏனோ தவறி விட்டார்கள்.

எந்த நல்ல நிகழ்ச்சி நடைபெறுமிடத்திலும் மங்கலமில்லாத சொற்களைத் தற்செயலாகக் கூடக் கேட்க விரும்பாத இவர்கள், மிக மங்கலமான திருமண நிகழ்ச்சியில் 'வாவரசியான' தமிழை விட்டுவிட்டு, உயிரிழந்து புதைந்து போன சமக்கிருதத்திற்கு, எப்படித்தான் இடம் கொடுத்தார்களோ?

'செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை' என்ற முறையில் முருகனிடம் அளவற்ற ஈடுபாடு காட்டி அவனுக்குக் காவடி எடுக்கும் நகரத்தார்களைக் கேட்கிறேன். நீங்கள் காவடி எடுத்துச் செல்லும்போது உங்களுக்கெல்லாம் சாமி வருகிறதே ஏன்? தமிழில் காவடிச் சிந்து இசைக்கப் படுவதால்தானே! காவடியைத் தூக்கித் தோளில் வைக்கும்போது அமைதியாக இருப்பவர் காவடிச் சிந்தைப் பாடத் தொடங்கியவுடன் ஆடத் தொடங்கி விடுகிருரே ஏன்? காவடிக்காரர் மட்டுமா ஆடுகிருர்; தண்டக்காரனும் சேகண்டியோடு தாவுகிருனே! சமக்கிருதத்தில் பாடுங்கள்; சாமி வருகிறதா பார்ப்போம்!

இப்படிச் சாமியையே வர வைக்கின்ற அளவுக்கு ஆற்றல் வாய்ந்த தன்னேரிலாத தமிழுக்கு நாம் திருமண வீடுகளில் இடம் கொடுக்க வேண்டாமா?

மணச் சடங்கின் போது ஐயர் 'இவளை என்றும் கை விட மாட்டேன்' என்று சமக்கிருதத்தில் சொல்லி நம்மைத் திருப்பிச் சொல்லச் சொல்கிறார். நாம் சமக்கிருதத்தில் சொல்ல நேர்வதால் மணவறையில் பலருக்கு முன்னால் அளித்த வாக்குறுதி நமக்குப் புரிவதில்லை. அது புரியாததால் பிற்காலத்தில் 'ஆச்சிக்கு' ஒரு வீடும் 'அம்மாவுக்கு' ஒரு வீடும் (சின்னமாகத்தான்!) கட்டிக் கொடுக்க நேர்ந்து, சிக்கனமான நமக்கு இரட்டைச் செலவாகி விடுகிறது. புரியாத சமக்கிருதத்தால் வரும் வினை இது.

ஒரு கூட்டுக் கடை ஒப்பந்தப் பத்திரம் தமிழில் இருந்தால்தான் நன்றாக விளங்கும் என்று நினைக்கிற நாம், வாழ்க்கை ஒப்பந்தத்தை நமக்குப் புரியாத சமக்கிருதத்தில் செய்து கொள்ளலாமா?

போனது போகட்டும். இனியாவது திருமணச் சடங்குகள் தமிழில் நடைபெற முயற்சி மேற்கொள்ள வேண்டும். நகரத்தாரில் யாரும் இதற்கு எதிர்ப்பாக இருப்பதுபோல் தெரியவில்லை. எல்லாரும் கூடிப் பேசினால் போதும். எது எதற்கோ—கேவலம் எத்தனை பலகாரம் செய்வது என்பதற்குக் கூடக் கூடிப் பேசிக் 'கட்டு' ஏற்படுத்துகிறோம். தமிழுக்குக் 'கட்டு' ஏற்படுத்தக் கூடாதா?

இந்தச் சிறு நூலில் உள்ள சா. கணேசனின் திருமண முறை 'பல தெய்வ வழிபாட்டை' (Poly-theism) அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

ஆடம் சுமித்துப் பிறப்பதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே நம்முடைய முன்னோர்கள் வேலைப் பிரிவினையைப் (Division of labour) பற்றி அறிந்து கொண்டு, இவ்வளவு வேலைகளையும் செய்ய ஒரு கடவுளால் முடியாதென்று கழிவிரக்கம் கொண்டு பல கடவுள்களை உண்டாக்கினார்கள் போலும்!

ஆனால் ஒன்று. கடவுள் இல்லை என்று மெய்ப்
பிக்கப் பட்டாலும் கடவுள் வேண்டும். சமூக ஒழுங்கு
நிலைபெறக் கடவுள் நம்பிக்கை துணை புரிவது போல்
வேறு எதுவும் துணை புரிவதில்லை. கடவுள் நம்பிக்
கையை எடுத்தெறிந்து விட்டால் உலகமே ஒரு
மனநோய் விடுதியாக (mental home) மாறிவிடும்

எப்படியோ! பழைய நம்பிக்கைகளை அழிப்பதும்
புதிய நம்பிக்கைகளை ஏற்படுத்துவதும் இவ் வெளி
யீட்டின் நோக்கமன்று. உங்கள் நம்பிக்கைகள் எவை
யாயினும் உங்கள் சடங்குகள் எவையாயினும் அவை
செயலாகும்போது அவற்றில் தமிழ் இடம் பெற
வேண்டுமென்பதை வலியுறுத்துவதே இவ் வெளியீட்
டின் நோக்கம்.

எங்கள் நோக்கம் நிறைவேற ஒரு தமிழ்த்
திருமண முறை வேண்டும். அந்த முறை பழமையைப்
புறக்கணிக்காததாக, மரபு தழுவியதாக இருக்க
வேண்டும். அந்த முறையை வகுத்துத் தருகின்ற
ஒருவர் சாத்திரங்களையும் சடங்குகளையும் சமயத்
தையும் பற்றி நன்கறிந்தவராக இருக்க வேண்டும்
என்பதோடு எல்லாராலும் அறியப்பட்டவராகவும்
இருக்க வேண்டும். அப்பொழுதுதான் நகரத்தா

அதை ஏற்றுக் கொள்வர். ஆகவே இவ்வளவும் ஒருங்கேயமைந்த சா. கணேசன் அவர்களின் தமிழ்த் திருமண முறையைப் பரப்புவதற்குத் தேர்ந்தெடுத்தோம்.

சா. கணேச அண்ணன் கம்பனிடத்தில் ஆழ்ந்த பற்றும் தமிழில் தேர்ந்த புலமையும் உடையவர்கள். நாட்டு விடுதலைக்காகச் சிறையிலே தவமிருந்தவர்கள். கல் வெட்டுத் துறையில் அனைவர்க்கும் முன்னோடி. பொது வாழ்க்கையன்றித் தனி வாழ்க்கை அறியாதவர்கள்.

அவர்களிடம் இந்தத் தமிழ்த் திருமண முறையை அச்சிட்டுப் பரப்புவதற்காக நாங்கள் கேட்டபோது மிக அன்புடன் தந்துதவினார்கள். அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

தமிழ்த் திருமணம் என்று அழைப்பிதழிலும் அடித்து எங்கள் இயக்கத்தைச் சூடேற்றியுள்ள ஆறுமுக அண்ணனுக்குப் பாராட்டு.

காரைக்குடி,
9—8—75.

பழ. கருப்பையா,
காந்தியத் தொண்டர் மன்றம்.

ஓம்

# உறுதிப்பாடு

## (சங்கல்பம்)

நாவலந் தீவில், பரத கண்டத்தில், தென்தமிழ் நாட்டில், கேரளசிங்க வளநாட்டாகிய (இன்ன கோவிலைச் சேர்ந்த இன்ன ஊர் இன்னாரின் மகன் இன்னார்)

கேரளசிங்க வளநாட்டாகிய (இன்ன கோவிலைச் சார்ந்த இன்ன ஊர் இன்னாரின் மகள் இன்னாரைக்)

கைப்பிடித்து மணங்கொள்ளும் இத்திருமணச் சடங்கு மங்கலமாக நிறைவேறவும், மணமக்கள் பேறு பதினாறும் பெற்று நிறைவாழ்வு வாழவும் அருள்சுரக்க வேண்டி

முழுமுதற் கடவுள் அருளையும், பெரியோர்களின் துணையையும் முற்கொண்டு, திருமணச் சடங்கை ஆற்றத் தொடங்குகிறேன். ஓம்.

# பிள்ளையார் வழிபாடு

பிள்ளையாரை மஞ்சளால் பிடித்து வைத்து அருகு செருகி, மலர் தூவி, வெற்றிலை, பாக்கு, கற்கண்டு படைத்து பதினாறு போற்றி ஓதி வழிபாடு செய்து,

(பூபாளம்)

வானுலகும், மண்ணுலகும்,
வாழ, மறை வாழ,
பான்மைதரு செய்யதமிழ்
பார்மிசை விளங்க,
ஞானமத ஐந்துகர
மூன்றுவிழி நால்வாய்,
ஆனைமுகனைப் பரவு
அஞ்சலி செய்கிற்பாம்

உடனே

மணமக்களுக்குக் காப்பு நாண் அணிவிக்க வேண்டும்.

# முழுமுதற் கடவுள் வணக்கம்

( நாட்டை )

உலகம் யாவையும்
தாமுள வாக்கலும்,
நிலைபெ றுத்தலும்
நீக்கலும், நீங்கலா
அலகிலா — விளையாட்டு
உடையார் அவர்
தலைவர் ; அன்னவர்க்கே
சரண் நாங்களே !

## சிவ வணக்கம்

(காம்போதி)

பொன்னும் மெய்ப் பொருளும் தருவானை,

போகமும் திருவும் புணர்ப்பானை,

பிள்ளை என் பிழையைப் பொறுப்பானை.

பிழைஎலாம் தவிரப் பணிப்பானை,

இன்ன தன்மையன் என்று அறியொண்ணு

எம்மானை எளிவந்த பிரானை,

அன்னம் வைகும் வயற் பழனத்து

அணி ஆரூரானை மறக்கலும் ஆமோ ?

## திருமால் வணக்கம்

( கல்யாணி )

குலந்தரும், செல்வம் தந்திடும், அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்

நிரந்தரம் செய்யும், நீள் விசும்பு அருளும்,
அருளொடு பெருநிலம் அளிக்கும்

வலந்தரும், மற்றும் தந்திடும், பெற்ற
தாயினும் ஆயின செய்யும்,

நலந்தரும், சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்!

## முருகன் வணக்கம்

( நாட்டைக் குறிஞ்சி )

முருகா ! முருகா ! முருகா !

வருவாய் மயில்மீ தினிலே

வடிவே லுடனே வருவாய் !

தருவாய் நலமும், தகவும், புகழும்,

தவமும், திறமும், தனமும், கனமும்

முருகா ! முருகா ! முருகா !

# கலைமகள் வணக்கம்

(பிலகரி)

நாடிப் புலங்கள் உழுவார்
கரமும், நயவுரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர்
நாவும், செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர்
நெஞ்சும், உவந்து நடம்
ஆடிக் களிக்கும் மயிலே!
உன்பாதம் அடைக்கமே.



# திருமகள் வணக்கம்

(திரு இராகம்)

செல்வத் திருமகளைத் திடங்கொண்டு
சிந்தனை செய்திடுவோம்;
செல்வ மெல்லாந் தருவாள்; நமதொளி
திக்கனைத்தும் பரவும்

# பராசக்தி வணக்கம்

## பைரவி

சொல்லுக் கடங்காவே பராசக்தி
சூரத் தனங்க ளெல்லாம்
வல்லமை தந்திடுவாள் பராசக்தி
வாழி என்றே துதிப்போம்

## திருவிளக்கு வழிபாடு

(மோகனம்)

சோதியே! சுடரே! சூழ்ஒளி விளக்கே!
சுரிகுழல் பணைமுலை மடந்தை
பாதியே! பரனே! பால்கொள் வெண்ணீற்றாய்!
பங்கயத்து அயனும் மால் அறியா
நீதியே! செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தம் மேவியசீர்
ஆதியே! அடியேன் ஆதரித்து அழைத்தால்
அதெந்துவே என்றருளாயே.

# கோள் வழிபாடு

( ஆரபி )

வேயுறு தோளி பங்கன் !
விடம் உண்ட கண்டன் !
மிக நல்ல வீணை தடவி !

மாசறு திங்கள் கங்கை
முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்த அதனல்

ஞாயிறு திங்கள் செவ்வாய்
புதன் வியாழம் வெள்ளி
சனிபாம்பு இரண்டும் உடனே

ஆசறும் ; நல்ல நல்ல
அவை நல்ல ; நல்ல
அடியார் அவர்க்கு மிகவே !

# ஐம்பூத வழிபாடு

(சுருட்டி)

இருநிலனய் தீயாகி, நீரும் ஆகி
இயமானன் ஆய், எறியும் காற்றும் ஆகி,
அருநிலைய திங்களாய், ஞாயி றாகி,
ஆகாசமாய், அட்ட மூர்த்தி ஆகி,
பெருநலனும், குற்றமும், பெண்ணும், ஆணும்
பிறருருவும், தம்முருவும், தாமே ஆகி,
நெருநலையாய், இன்றாகி, நாளை ஆகி,
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே!

# வாழ்க்கை ஒப்பந்தம்

மண வேள்வி வளர்த்து நெய்வார்த்து அங்கி எரியும் போது

நடாத்துபவர் முன்மொழிய மணமக்கள் இருவரும் பின்மொழிய வேண்டும்.

கடவுள் அருளாலும், அறவோர், பெரியோர் ஆசியாலும் மணமக்களாக நாங்கள் அங்கியங்கடவுள் முன்னுக ஒருவரை ஒருவர் வாழ்க்கைத் துணைவராக ஏற்றுக்கொள்ளுகிறேம்.

நாங்கள் இருவரும், என்றென்றும், ஓருயிரும் ஈருடலும் என்னக் கருத்தொருமித்து திருத்தகு வாழ்வைக் கடைப்பிடிப்போமாக! எங்கள் இல்லறமாகிய நல்லறத்தில், அன்பும், அறமும் இருகண்களாய் அமைய அருள் நெறி விளங்க, நாங்கள் மனம், மொழி, மெய்யால் முயலுவோமாக!

வள்ளுவனையும் - வாசுகியையும், காந்தியையும் - கத்தூரியையும் எங்கள் வாழ்க்கை ஒளியாயும் வழி காட்டிகளாகவும் கொண்டு, இன்பத்திலே இறுமாந்து விடாமலும், துன்பத்திலே சோர்ந்து துவண்டுவிடா மலும் என்றும், எங்கும் இணைபிரியாது இதயம் ஒன்றி எழிலார் வாழ்க்கை நடத்துவோமாக!

அம்மையப்பன் அருளால் இன்று மலரும் எங்கள் இல்லற வாழ்வில் என்றும் நல்ல தம்பதிகளாக விளங்கு வோம் என்று உறுதி பூண்கிறோம்.

அன்பு! அன்பு!! அன்பு!!!

இதன் பின் மணமகள் மணையில் நிற்க மணமகன் தரையில் தடுக்கின் மீது நின்று கொண்டு திருப் பூட்டுதல்.

அப்பொழுது நடாத்துபவர் "மணமக்கள் வாழ்க" என மும்முறை மொழிய யாவரும் "வாழ்க வாழ்க!" என முழங்கி அட்சதை,+மலர்களை மணமக்கள் மீது பொழிய வேண்டும்.

# மணமக்களின் பிரார்த்தனே

(மணமக்கள் இருவரும் மணேயில் அமர்ந்து ஓத வேண்டியது)

கடவுள் நம்மைக் காப்பாராக!

உண்டியும் உடையும் உவப்பன யாவும்

தந்து நம்மைத் தாங்குவா ராக!

காரியம் யாவினும் கருத்து ஒருமித்து

வீரியத்துடன் நாம் விரவியே செய்குவம்

கல்வியும், ஞானமும், கலேயுணர் திறமும்,

ஒளியுடன் வளர்ந்து ஓங்குவ் ராக!

உள்ளத் தாலும் ஒருவர்மாட் டொருவர்

கொள்ளா திருப்போம் கோபமும் வெறுப்பும்!

சாந்தி! சாந்தி! சாந்தி பெறுவோம்.

## மணமக்கள் வாழ்க்கை

(மணிரங்கு)

மண்ணில் நல்ல வண்ணம்
வாழலாம், வைகலும் ;
எண்ணில் நல்ல கதிக்கு
யாதும் ஓர் குறைவிலே ;
கண்ணில் நல்லஃதுறும் ;
கழுமல வளநகர்ப்
பெண்ணின் நல்லாளொடும்
பெருந்தகை இருந்ததே !

## நிறைவு

வாழிய செந்தமிழ்; வாழ்கநற் றமிழர்;
வாழிய பாரத மணித்திரு நாடு;
வந்தே மாதரம்! வந்தே மாதரம்!

காப்பவிழ்த்துக் கண்ணேறு கழித்தல்.



# நகரத்தார்களே
## ஒரு சொற் கேளீர் !

உங்கள் சடங்குகளை மாற்ற வேண்டாம்

உங்கள் பழக்க வழக்கங்களை மாற்ற வேண்டாம்

உங்கள் ஐயரையும் மாற்ற வேண்டாம்

ஆனால் சமக்கிருதத்தை மாற்றுங்கள்.

எங்கும் எதிலும் இன்பத் தமிழே -
இடம் பெறுமாறு செய்யுங்கள்






சமக்கிருதத்தைப் பற்றிய கவலைகளைச்

சங்கராச்சாரியாரிடம் விட்டு விடுங்கள் !

நமக்குக் கவலைகளா இல்லை ?

நகரத்தார் திருமணங்களிலும்
நகரச் சிவன் கோவில்களிலும்
பட்டினத்தாரும், பாடுவார்
முத்தப்ப செட்டியாரும் பாடிப் பரப்பிய
**தமிழே** வீறு கொண்டு முழங்க வேண்டும்.

## முத்தையா அரசர்
## தலைமை ஏற்க வேண்டும்

இசையரங்குகளில் திமிரோடு கொலுவிருந்த தெலுங்கின் பிடரியைப் பிடித்து வெளியேற்றி, அன்னைத் தமிழுக்கு அரியணை தந்த அண்ணாமலையரசரின் வழித்தோன்றல் முத்தையா அரசரே முத்தனைய தமிழ் மண வீடுகளிலும் நகரச் சிவன் கோவில்களிலும் இடம் பெற ஒரு வழி செய்ய வேண்டும்.

தமிழுக்காகத் தெலுங்கை எதிர்த்த அவர்கள்,
தமிழுக்காக இந்தியை எதிர்த்த அவர்கள்,
தமிழுக்காகச் சமக்கிருதத்தை எதிர்க்கும்
இந்த இயக்கத்திற்குத் தலைமை ஏற்று வழி காட்ட வேண்டும்.

காந்தியத் தொண்டர் மன்றம்,
காரைக்குடி.

வலம்புரி அச்சகம், மதுரை — 1.